உ

சிவமயம்.

கணபதி துணை.

மதுரைமாநகரம் திருவாலவாய்

துவாதசாந்த க்ஷேத்திரமென்று

பிரஸித்தநாமங்களையுடைய

# கூடற்றிருவிளையாடல்

# யமகவந்தாதி.

இஃது

புதுக்கோட்டை சமஸ்தானம்

இராயபுரத்திலிருக்கும் மழவை

சுந்தரமய்யரவர்கள் குமாரர்

சுப்பய்யரவர்களியற்றியது.

ஷ இராயபுரத்திலிருக்கும்

நா. க. பெ. ரி. முத்தய்யாசெட்டியா

ரவர்களால்

சென்னை:

மிமோரியல்அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

சர்வசித்துஹு ஆடிமீ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சாற்றுகவி.

————:o:————

இவைமழவைப்பதியிலிருக்கும்

## சிதம்பரபாரதியாரியற்றியது.

கட்டளைக்கலித்துறை.

மதுரையந்தாதிவரும்பொழிலார்மழவாபுரித்தன்
மதுரையந்தாதிரையாரடியான்சுப்பிரமணியன்ற [ண்
மதுரையந்தாதிக்கெலா மமுதாய்க்கூடல் வான்பெயர்கொ
மதுரையந்தாதிசொற்றான்சுந்தரேசர்மகிழ்ந்திடவே.

---

ஷை யார் ஜேஷ்டபுத்ரன்

## சுப்பிரமண்யபாரதிஇயற்றியது.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

இன்னமுதத்தையுங்கன்னலையும்வெறுத்திடச்
செய்யுமினசொவோங்கு
நன்னயஞ்சேர்மழவைச்சுந்தரமறையோன்
செயுந்தவத்தினுல்வந்துற்ற
தன்னிகரில்லாச்சுப்பிரமணியன்மாரமணிய
மாய்த்தருக்கள்வானி
லுன்னவுறுங்கூடலந்தாதியைமொழிந்தான்
பவமொழிந்தானுவக்கத்தானே.

---

ஷெ யார் தம்பி சதாவதானம்

## மீனாட்சிசுந்தரபாரதி இயற்றியது.

திருக்கூடலந்தாதியெனநடித்துப்பத்தரகஞ்சேர்ந்தோ ளுமுத், திருக்கூடலந்தாதிகிரியுடையோரிருவர்பணி தேவ ன்மீது, திருக்கூடலந்தாதியமகமெனமழவைநகர்த்திரனும் மா, திருக்கூடலந்தாதிமறையுமுனார்சுப்ரமண்யன்செய்தா ன்மாதோ.

திருமருவுகூடலந்தாதியெனுமொருபிரபந்தஞ்செய்தா னெங்க, ளுருமருவுமழவைநகர்ச்சுப்ரமண்யபூசுரனு முசித ன்கேட்டார், தருமருவுகலைமகள்பெரியவணம்போயம்மன வேதனையேயுற்றாள், குருமருவுசேடனுமண்டலங்கொண் டாலிதன்பெருமைகூறப்போமோ.

———.o:———

குன்றக்குடிமடத்துவாசல் ஆதீனவித்துவான்

முத்துசாமிக்கவிராயர் குமாரர்

## வீரபத்திரக்கவிஞன் இயற்றியது.

தருவாலவாயடையிற்கண்வளருமாயன்மலர்த் தவிசன் போற்றும், பெருவாலவாரிதிசூழ்மகியிலமுதிற்பருகிப்பெரு கச்சோலைத், திருவாலவாயென்னுங்கூடலந்தாதியை யிசை த்தான்திகழ்பாநூற்றின், மருவாலவாழ்மழவைச் சுப்பிரம ண்யபூசுரநாவல்லோன்றனே.

———:o:———

சாற்றுகவி.

குன்றக்குடியிலிருக்கும்

திருவண்ணாமலை யாதீனமடத்து

வித்வான் முத்துசாமிக்கவிராயர் குமாரர்

## வீரபத்திரக்கவிஞன் இயற்றியது.

கட்குலாமுட்டண்டின்வனசமுற்பலமதைக்
கடைசியர்குழாநெருங்கிக்
கவினுறுங்கூழையடர்களையெனக்கருதிக்
களைந்தொதுக்கிடும்வரம்பார்
விட்குலாங்கந்திமாமடலைமாசுணமென
வெகுண்டிருஞ்சிறையினுவணம்
விணைவினெடுபாய்ந்தலமுறுஞ்செழும்பழனங்கள்
மேவிடுங்கூடறன்னில்
அட்குலாம்பொற்குழைச்சுந்தரனியற்றிடும்
மறுபத்துநான்கிலீலை
யதனைநற்சுவையொழுகுதென்மொழியினந்தாதி
யாநூறியாப்புரைத்தான்
பட்குலாமறையீரிரண்டுமாறங்கமும்
பழுதறவுணர்ந்தநிபுணன்
பகர்விப்ரகுலன்மழவைவளர்சுப்ரமண்யபா
வலவநற்கனதைவானே.

—————:O:—————

கணபதிதுணை.

மீனாக்ஷிசுந்தரேசுரர்துணை.

# கூடற்றிருவிளையாடல் யமுகவந்தாதி.

## காப்பு.

பொற்றுமனாக்கனைச்சித்திவிநாயகன்பொற்பதம்பூ
ணற்றுமனாமுகத்தாரிமையாசலநாரியம்மெய்ப்
பற்றுமனையுடலார்கூடலந்தாதிபாடநன்னீ
ரிற்றுமனாவாய்ச்சதங்கையொலியோடெதிர்நிற்குமே.

## நூல்.

திருமஞ்சனஞ்சொரிந்தாட்டியர்ச்சித்துப்பூசித்துகந்த
திருமஞ்சனப்பல்லியங்கண்முழக்கிந்திரன்றொழவெ
திருமஞ்சனக்குன்றமாமத்தியோடத்திருவருண்மு
திருமஞ்சனசேகராகூடன்மேவுசிவாசம்புவே. (க)

வாசவனத்தின்மலர்நீபமூலவரவிலிங்க
வாசவனத்தினன்சென்னிகொய்தேவவடிதொழுதார்
வாசவனத்தின்முடியிட்டசாபத்தைமாற்றியன்று
வாசவனத்தியையாண்டதென்கூடல்விமானத்தனே. (உ)

மானகரங்கமலைநாகமாகவழுத்துகஞ்ச
மானகரங்கணுமைபாககூடன்மருவும்பி
மானகரங்களமுற்றேய்குலசேகரன்மதுரை
மானகரங்கண்டிடவருள்பொற்கமலத்தடனே. (ங)

தடாதகையாலறமுப்பத்திரண்டுந்தருமுமையு
தடாதகையார்கனியாமலைமாதைநற்றுணைபுல்ல
தடாதகையாவன்பனுமலையத்வசன்றன்சுதையாய்த்
தடாதகையாளெனத்தந்ததென்கூடற்றலைமன்னனே. (ச)

யன்றலங்காரன்னகூந்தற்றடாதகைவல்லியங்கா
மன்றலங்காரமுளதிசையாவும்வணங்கவென்று
மன்றலங்காரவெண்குன்றுற்றெதிர்க்கமலர்க்கைபற்றி
மன்றலங்காரரசாள்கூடலிற்செய்துவாழ்பதனே. (௫)

பதஞ்சலிக்காதுணமன்றல்செய்கூடற்பதியிற்பருப்
பதஞ்சலிக்கார்கொங்கைகுய்யக்கயல்விழிப்பாவைபங்க
பதஞ்சலிக்காற்புலிக்கூட்டவிரசிதவம்பலத்திற்
பதஞ்சலிக்காநடஞ்செய்குணக்குன்றேபராபரனே. (௬)

பரனேகன்கூடலின்மாமன்றறன்னிற்படர்ந்துவந்தன்
பரனேகவொன்றட்டதுமிஞ்சவட்டோர்பனைமுன்வந்திம்
பரனேகழறெனவன்னுணர்த்தப்பரிந்ததளம்
பரனேகணத்திற்குண்டோதரனுண்ணப்பணித்தனனே. (௭)

தனமரும்பன்னவுமைபாககுண்டோதரனுனுமோ
தளமருகிப்பசிதாகமிகுந்ததளர்வறநூ
தனமருவக்கூடலிற்குழிநான்கிற்றதியசனந்
தனமருகில்லைவகையாறெடுந்தந்தவீசாகனனே. (௮)

சாகரமேவுதயிற்சொப்பனத்தும்பக்தர்வசநி
சாகரமேயனையார்நினையார்நின்றனைச்சடைநி
சாகரமேதகமாமாமிக்காகத்தரணியைச்சூழ்
சாகரமேழுமக்கூடலிலேதந்தவமலனே. (௯)

மலையத்துவன்முனிபோற்றும்பராவளர்கூடலின்முன்
மலையத்துவசத்தொடுவருமன்னர்வணங்கவெல்லும்
மலையத்துவசனவ்விண்ணிழிந்தேதன்மனைவியொட
மலையத்துவர்க்கடலாடப்பதந்தந்துவாழ்தென்னனே. (௧௦)

தென்னவனைவிற்புயனிறக்கூற்றைச்சினத்துதைத்த
தென்னவனைவிதமாமுகத்தேவரம்பைகமுகு
தென்னவனைமலர்ச்சோலையங்கூடலிற்சேயனுக்ரத்
தென்னவனைத்தந்ததேவேகயற்கண்ணிசேர்ப்ரபுவே. (கக)

வேலைவளையைப்புவிபுகழுக்ரன்மெய்க்கூடல்வளர்
வேலைவளையையணிசோமசேகரன்வேண்டியருள்
* வேலைவளையையுமுந்தோட்செவிமின்னைவேட்டுயர்ந்த
வேலைவளையைச்செண்டைக்கொடுத்தாண்டவிகடத்தனே.()

† கடலைச்சுமையுறுவெந்துயர்நீங்கிக்களித்தமரர்
கடலைச்சுசமுறச்சூர்தடிந்தோனின்கனிபயறு
கடலைச்சுவையுண்டந்தித்துணைகூடற்குகந்தவுக்ரன்
கடலைச்சுவற்றவயில்விடவாண்டவனைக்கன்னனே. (கஉ)

வளைவிடவாரியுண்டேமுன்பொதிகைவருமுகிலை
வளைவிடமேசெவிகண்ணுமைசேய்சிறைவைக்கச்சக்ரி
வளைவிடமரோடுவந்தமராடிமகுடமிற
வளைவிடவுக்ரர்க்கருள்கூடலாய்விடைவாகனனே. (கச)

கனகந்தரப்புவியார்வளமற்றுக்கருகப்பன்னாட்
கனகந்தரப்புனற்குன்றப்பொன்மேருக்கலங்கிமிகு
கனகந்தரச்செண்டினான்மோதவுக்ரர்க்கருளுகுழைக்
கனகந்தரச்சடையாய்கூடன்மாநகர்காத்தவனே. (கரு)

தவருக்கருத்தமதுதெரியாமறைதன்னைநந்தா
தவருக்கருத்தமதுவன்னலூட்டியசாத்திரவே
தவருக்கருத்தமதுகையமரர்தபோதனரோ
தவருக்கருத்தமதுங்கர்சொற்கூடலிற்சார்ந்தவனே. (கசு)

---

* வேல் - மூங்கில். † கள் - தலை.

நவமணிவில்லொடுகானத்தின்வேங்கையினந்தியமன்
நவமணிலம்புகழ்மீனவன்மைந்தர்க்கன்னுண்மகுட
நவமணிவேண்டவணிகருருக்கொண்டுநல்கியவா
நவமணிக்கந்தரகூடற்றொழுழவருணயகனே. (கஎ)

வருணனையாற்றென்னன்பூசித்தநீரும்வரையுற்றந்தி
வருணனையாகண்டலன்றொழுற்கேட்டரன்மாண்பறிய
வருணனையார்கலிகூடன்மேலேவவம்மாநகர
வருணனையாதஞ்செய்வேணிவானேவினுன்வாழ்வுதந்தே.()

நான்மாடக்கூவனைமுந்நீர்க்குநாதன்நவின்முகிலி
நான்மாடக்கூடவிலானரரஞ்சநம்பன்சடைவா
நான்மாடக்கூடமதாய்க்காக்கவேவருணன்றுதிக்க
நான்மாடக்கூடலதாக்குமதுரைநகர்ச்சித்தனே. (கக)

சித்தருருத்திரர்மாலயனிந்திரன்சேர்திசைப்ர
சித்தருட்பெருந்தேர்த்தென்னரோத்தித்தினமறவாச்
சித்தருருகப்புதுமைபலசெய்தெல்லாம்வல்லமா
சித்தருருக்கொடுகூடலுலாவித்திகழ்புங்கனே. (உ0)

புகலானையேறுபுனிதமிகுமெப்புவியுயிர்க்கும்
புகலானையேயுனையொப்பார்தினம்நம்பிப்போற்றுமெய்யன்
புகலானையேமருவாயொருதென்னன்கைபூண்டகரும்
புகலானையேயுண்நோக்கியகூடலின்போதத்தனே. (உக)

போதகமெய்தப்பிரமனரியொடுபோகிபுகழ்
போதகமெய்தழைபுங்கவகூடற்புரியஞ்சவப்
போதகமெய்தவிர்வஞ்சச்சமணர்புகவிடுவெம்
போதகமெய்தவனசரவேடபூபாலனனே. (உஉ)

பாலனுமானகலாதவிராமன்பணிபரம
* பாலனுமானனசொற்கட்கௌரியைப்பாகங்கொளன்
பாலனுமானமுனையாவிருத்தகுமாரன்பகர்
பாலனுமானவகூடலின்மாறிகழ்ப்பண்ணவனே. (உங)

மாறினடஞ்செய்பவரஞ்சத்தென்னன்மகளென்முரு
மாறினடஞ்செயமன்னவோர்தென்னன்வளவனினே
மாறினடஞ்செயல்கற்றுநின்னுடற்குவாடநின்கான்
மாறினடஞ்செய்தங்கூடலிலாள்பார்மகிழ்வரனே. (உச)

பார்ப்பனியாருயிராற்கொம்பினம்பிற்படவனவன்
பார்ப்பனியார்ப்பத்தென்கூடல்வணிகன்மணப்பந்தலுட்
பார்ப்பனியாயமையன்றென்னன்காணப்பழிக்கருளும்
† பார்ப்பனியாழ்மொழியாய்க்காட்டுமால்பணிபாதத்தனே.

‡ பாதகமலவனையைப்புணர்ந்தப்பனைக்கொல்கொடும்
பாதகமலமரப்பற்றநின்னருட்பன்னுதறப்
பாதகமலர்வுறப்புரிவிப்பிரன்பாபமறப்
பாதகமலங்கொடுத்தாண்டகூடற்பதியங்கனே. (உசு)

அங்கனையன்னவளர்த்துபதேசித்தவாசிரியன்
அங்கனையன்னநடையாளையிச்சித்தணையவெய்தும்
அங்கனையன்னகர்காணத்தண்டித்தவமலன்மறை
அங்கனையன்னனயன்கூடன்மேவுவானுகத்தனே. (உஎ)

நாகமெய்தற்பமெனத்துயின்மாறெருழும்நம்பசெம்பொன்
நாகமெய்தந்தனமின்னிடையாருமைநண்புறபி
நாகமெய்தற்பரமீகூடனுதசமணர்விடு
நாகமெய்தற்பவமணளாக்கண்டமாய்வைத்தவனே. (உஅ)

---

* அனு - தொடர்பு. † பார்-பாறையை. ‡ பா-தகு-அமல.

மாயப்பசுவையகமிதின்மூடவமணரவ
மாயப்பசுவையுறுநின்றதிமதியாதுவந்து
மாயப்பசுவைவிடநின்விடையின்மயங்கியுயிர்
மாய்ப்பசுவைவையதன்னொடுகூடலில்வாழ்சுத்தனே. (உக)

சுந்தரசாமநிறைகந்தரவெண்சுடரொளிவீ
சுந்தரசாமகீதாகூடலோர்தென்னன்றேமறுகா
சுந்தரசாமன்படைக்கீபொனின்பாற்றுணிந்தளித்த
சுந்தரசாமந்தர்க்காய்மெய்க்காட்டிட்டசுகுணத்தனே. (௩௦

குலவாக்கிளையிசை யான்மேய்க்குமாறெழுங் கோவெ ன்னெஞ்சிற், குலவாக்கினிய னின்னன்பனதாய்க்கொண்டு கோதையரல், குலவாக்கிளையாதருள்கூடலர்ய்நல் குரவற வங், குலவாக்கிழியொருதென்னனுக்கீய்ந்தவுயர்வளனே. ()

வளைவிற்றழைகுழைச்செல்விபங்காபலிவாங்கவெய்தி
வளைவிற்றகுகளநன்னுதலார்நின்மயலிற்சுற்ற
வளைவிற்றவர்முனிந்தேகூறுசாபத்தைமாற்றுதற்கு
வளைவிற்றவாகூடலிலென்றும்வாழுமட்டாலயனே. (௩உ)

* அட்டமாசிக்கவரையெடுத்தோன்றெழுமையபுரம்
அட்டமாசிற்பரவாரன்மின்னார்பட்டமங்கையினால்
† அட்டமாசித்துறக்கல்லாமுருவம்கற்றியன்பாய்
அட்டமாசித்தியருளுங்கூடற்களமார்விடனே. (௩௩)

விடைமுத்திதந்தென்னையாளுயிர்போமுன்விரைந்துவந்து
விடைமுத்திகழ்கன்னவோரல்வந்துன்னைச்சேவித்தகல
விடைமுத்தியவருளின்னல்கிக்கூடல்வியனரண்வாய்
விடைமுத்திரைவைத்துச்சோழன்றனாராரவிட்டவனே. ()

---

* அள் - தமி. † அட்டம் - அருகிடம்.

ஆரக்கணியான்வழுதியைநேர்ந்துவந்தாடுமமர்
ஆரக்கணியாவெயிற்கஞ்சியதென்னவன்படைக்கு
ஆரக்கணியாதரித்துநீர்ப்பந்தல்வைத்தாடறந்தே
ஆரக்கணியாவழுதியைக்கூடலிலாள்கனனே. (௩௫)

கனவிரதம்புனை பூவணர்க்காம்விக்கிரகம்செய்துவா
கனவிரதம்புணர்மாவிழாவாற்றக்கருதிநின்பாற்
கனவிரதம்புரிபொன்னனைக்காய்ரசவாதஞ்செய்மோ
* கனவிரதம்புரைநாகதென்கூடனகர்வள்ளலே. (௩௬)

வளவனையேயெனக்கூடலைக்காக்கும்வரதமெய்ப
வளவனையோர்மதிவேணியநின்னன்புமாறமுன்ன
வளவனையேமருவத்தென்னன்மாற்றலனுகிவந்து
வளவனையேமடுவில்வீட்டியென்றும்வளர்கோட்டனே. ()

கோட்டையரிதவழ்கூடலிலன்னக்கொடையனகரிக்
கோட்டையரிமுலைக்கண்ணியோடெய்திக்குறைபுகலக்
கோட்டையரிந்தவன்பூசித்தவாவன்புகொண்டுலவாக்
கோட்டையரிசிகொடுத்தவம்மானத்தின்கொற்றவனே. ()

அம்மானுருக்கமுடனண்ணிதேபுரமட்டவன்னுள்
அம்மானுருக்கொடுமாறுங்குகோகூடலார்வணிகர்
அம்மானுருகவவள்சுதனுக்குமுன்னுஸ்திதந்த
அம்மானுருத்துவருவதுபோலவந்தான்வரனே. (௩௯)

வரகுணபாலனமாதேவதேவவார்வாசுகியார்
வரகுணபார்ப்பதிநாதநினைமருதூரிற்றெழ
வரகுணபால்வாயினிலத்திரீங்கிச்சிவவுலகை
வரகுணபாண்டியன்கூடலிற்காணவாள்வானவனே. (௪௦)

---

* இரதம் - அரைஞாண்.

காட்டஞ்சுமந்தமிதுனவல்லான்கறுவம்மடக்கக்
காட்டஞ்சுமந்தவரியாம்வரகுணக்கௌரியன்வாய்க்
* காட்டஞ்சுமந்தயாழ்ப்பத்ரனாயேவக்கனாந்தவர்க்காய்க்
காட்டஞ்சுமந்தவகூடலில்வாகாமகோசரனே. (௬௧)

கோசக்கரப்புவியாடென்னன்கூடலின்கோனவன்பொற்
கோசக்கரவிற்கொடுத்தல்நிறைத்தக்குறையுறசங்
கோசக்கரப்பத்திரன்முன்றிருமுகங்கொள்ளவருள்
கோசக்கரவுமையாட்குமெய்பாதிகொடுத்தவனே. (௬௨)

பாதியிருளிரவிற்சோலையில்யாழ்பயிலவந்து
பாதியிருதயத்தென்னுதபத்திரனுக்கருணன்
பாதியிருபாற்பகரப்பலகைபரிந்துதவன்
பாதியிருசுடர்க்கண்ணதென்கூடலின்பத்திரனே. (௬௩)

பத்திரனேவேதனத்தினிற்பூசிப்பவர்க்கருளும்
பத்திரனேமுகன்கூடற்செழியன்பகையினில்யாழ்ப்
பத்திரனேமனையாழ்ப்பாணத்தாளிற்பயந்திடமு
பத்திரனையவிசைவாதுவென்றசுபன்றிரனே. (௬௪)

பன்றிக்குட்டிண்ணன்றென்கூடலிற்றேவாபணிந்திடுநன்
பன்றிக்குட்டித்தோலுடையனயனேப்பகைத்திரங்கன்
பன்றிக்குட்டிச்சிறையிட்டோன்றந்தைகுருசாபமுற்ற
பன்றிக்குட்டிக்குமுலையீய்ந்தவன்மைபம்பொன்மந்திரனே.()

---

* காழ் - ஒளி - தம் - தம்முடைய - சு - நன்மை - மந்தம் - கூரியமதியிலாதவன் சுயம்பிரகாசவடிவான தம அ நன்மைப்பாடுள்ள அன்பனுகியும் எதிரியைவெற்றி.

மந்திரியார்வமுறமுயர்நண்பவழூதிகரு
மந்திரியாதருள்வானவவேளைமடித்திடுதூ
மந்திரியாரநுதற்கண்ணமுந்நால்வராகவமந்தர்
மந்திரியாகமெய்க்கூடலில்வைத்தெலாமாங்கரியே. (சசு)

கரிக்குருவிற்றிடவீர்த்ததள்போர்த்தியகண்ணுதல்விண்
கரிக்குருவின்முதலோர்போற்றுங்காரணகூடலின்ன
கரிக்குருவித்தபறவைகட்கஞ்சிநின்கண்ணடைந்த
கரிக்குருவிக்குபதேசித்தநீபக்கானரனே. (சஎ)

நாரைக்குயமலையின்சொற்கனியிதழ்நன்னுதன்மா
நாரைக்குயத்துருவத்திலுற்றேவலினைந்திடவா
நாரைக்குயமெனவண்டேனின்கூடலினண்பனென்றுள்
நாரைக்குயர்முத்திதந்தருணுதகுணாலயனே. (சஅ)

ஆலவாயார்நான்முனிவர்க்குமெய்ப்பொருளன்றுரைத்த
* ஆலவாயாரணன்மாலறியாதவவன்பிலர்க்கு
ஆலவாயாய்கூடலுக்கெல்லைகாட்டிமுன்னஃதுதிரு
ஆலவாயாகவருளுமெச்சுந்தரமானவனே. (சகூ)

† சுந்தரப்பேரம்புதொட்டேவிநேருற்றுத்தோள்வலிபே
சுந்தரப்பேரணிச்சோழன்புறந்தந்துதொல்லுலகே
சுந்தரப்பேரறிவற்றோடத்தென்னற்குத்தோற்றமுந்தே
சுந்தரப்பேராதெர்குசு டனுவலதூயவனே. (டு௦)

நாவலராளயன்சாபத்திற்கூடலிலெண்ணறுநன்
நாவலராகவரவவரோடுற்றெருளினுமா
நாவலரார்வரினுந்நண்ணவாய்பலகைதருக
நாவலராமதிசூடியருள்வையிந்நாட்பரிந்தே. (டுக)

---

* ஆலம் - நீர். † தரம் - வலி.

* பரிகாரமேற்கைமணமுள்ளதென்றுபகர்கவியைப்
பரிகாரஞ்செய்தநக்கீரனைவாதிற்பயப்படுத்திப்
பரிகாரமுற்றதருமிக்குவேட்கும்படிக்குநல்கு
பரிகாரமாமுடிப்பீயந்ததென்கூடற்பதிக்கீசனே. (௫௨)

கீரனையச்சொற்கிணங்கானுதற்கட்கிளம்பனலாற்
கீரனைப்பொற்கஞ்சத்தடம்வீட்டிக்கிலேசத்தினாற்
கீரனைத்துதிக்கக்கரையேற்றுகிரீசன்கண்ணே
கீரனையன்னவன்கூடலிலாள்வன்கிளரன்பரோ. (௫௩)

அகத்தியனாடவறியேனிகழ்ந்தனனற்பன்மிக
அகத்தியனாமெனக்கார்கதிகூடலணிநகர
அகத்தியனாடியருளெனுங்கீரற்கிலக்கணந்தான்
அகத்தியனாலன்றுபோதித்தநாகவணிகலனே. (௫௪)

கலகந்தரித்துப்பலியேற்றகங்காதரகசட
கலகந்தரிக்குமருட்கடலேயுடுக்கைக்குயர்ச
கலகந்தரினஞ்சலுமைவணிகனிற்சங்கத்தவர்
கலகந்தரியாவுயர்கூடலினிடைகாத்தவனே. (௫௫)

இடைக்காடரவமணியாய்க்கூடற்கௌரியன்னவைவாய்
இடைக்காடரவமணியாயுறைந்தேயியம்புகவி
இடைக்காடரவமணியாவடவாலவாயெய்திய
இடைக்காடரவமணியார்விமானவெற்பின்சாபனே. (௫௬)

சாபத்தினாற்கடன்மீனானந்திதனைக்கவர்ந்து
சாபத்தினார்நுதன்மீன்புலமாதைத்தழுவியவீ
சாபத்தினாவுக்கரசர்முதலோர்தமக்கருணே
சாபத்தினாலுலகுந்தொழுங்கூடற்றவாதவனே. (௫௭)

---

* பரிகாரம் - பெண்மயிர்.

வாதமியங்கிரதமாரன்றன்னைமடியவென்ற
வாதமியனும்படையொடுதில்லைவருபுத்தரை
வாதமியம்பிவெல்வாதபுரற்குமறைமொழிதே
வாதமியன்றனையாள்கூடலிற்பரிவாரத்தனே. (ருஅ)

பரியாகமாதிபுகழ்கூடறன்னிற்பகைவரஞ்சு
பரியாகமாககொள்ளத்தென்னவன்றன்னிதிபற்றிநின்னன்
* பரியாகமாவிபொருண்மூன்றுங்கொண்டுபணித்துநரி
பரியாகமாற்றித்தென்னற்கீய்ந்தநாரிபாகாநலனே. (ருகூ)

கானரியார்விண்டெர்டவெழுந்தோங்கிக்கமழ்கடம்பக்
கானரியார்கசடர்க்குக்கதிபுவிகாத்திடுவா
கானரியானுமறியார்தென்கூடலின்கண்பரிதங்
கானரியாகியுலவச்செய்தார்கும்புகாட்டியன்றே. (சூ0)

கும்பிட்டுக்கையாதபத்திசெய்தேகுறமங்கையளிக்
கும்பிட்டுக்கையேந்தியுண்குகன்றந்தைதென்கூட்றன்னிற்
கும்பிட்டுக்ளீகதவனேவஞ்சுவந்திதன்கூலிக்கினிக்
கும்பிட்டுக்கைவைகைமண்சுமந்தாண்டனன்கோன்சுரனே.

சுரமாரருமறைபோற்றுநின்கூடற்றெழுவரும
சுரமாரகனஞ்சச்சம்பந்தர்சாரில்விற்குறுபா
சுரமாரணச்சமணர்வைத்ததீவந்தசூழ்ந்திடுவெஞ்
சுரமாரஞர்வழுதிக்கறவாண்டசுபகரனே. (சூஉ)

கழுவாருடற்பாயுடையாருறிதழைகைக்கொடுநி
கழுவாருடற்றிப்பெருந்தியில்வைகையிலேடதிட்டி
கழுவாருடன்வாதிற்சம்பந்தரோசெயிக்கச்சமணர்
§ கழுவாருடக்கூடலிற்சைவமோங்கமுன்காத்தவனே. ()

* இ - குறுக்கல்விகாரம். § ஆருடம் = யேறல்.

வனியிலிங்கன்பொடுமாதவஞ்செய்பவரினுமிவ்வ
வனியிலின்பம்பெறக்கூடலில்வாழ்பவருக்கருள்ப
வனியிலிர்க்குங்கடம்பாடவியாய்செட்டிமாதினுக்காய்
வனியிலிங்கங்கிணறுஞ்சாட்சியாகவழைத்தவனே. (௬௪)

தவமாதவன்புகழ்சங்கரவேணிதனில்மதிவைத்
தவமாதரமுலைவேல்விழிமேனையத்தையறந்து
தவமாதனைபரவன்பரஞ்ஞானத்தமமஞ்சுமா
தவமாதரணிதொழுங்கூடலாயொளிதங்கங்கனே. (௬௫)

கங்காதரனேகருதுமுயிர்கடொறுமுற்றங்குக்
கங்காதரனேர்ந்தருள்புரிவோயுறுங்காமுகரா
கங்காதரனேர்விழியார் மயலறக்காவெனைவா
கங்காதரனேயுயர்கூடற்கண்டிகழ்வானவனே. (௬௬)

வானவனத்தனதியுமதியுமணிந்தமக
வானவனத்தன்முதலோர்பணியமகிழ்பக
வானவனத்தன்புமையாள்கொழுநன்மறையின்வடி
வானவனத்தன்மலர்நீபக்கூடலவாகாமனனே. (௬௭)

காமனையேயெரித்தோய்சூரனைவென்றுகைதொழுத
காமனையேயருள்சேயனைத்தந்தகங்காதரவா
காமனையேயெனவன்பலாயாளுங்கருணையவே
காமனையேமிகுகூடன்மழுத்திருக்கையினனே. (௬௮)

திருக்கயிலாயத்துழன்றேமுன்றுள்ளவர்தேடிவைத்த
திருக்கயிலாயபொருள்களுந்தோற்றுத்திரிந்திடுமா
திருக்கயிலாயனடையாறுயர்கூடலிற்சேருநெஞ்சே
திருக்கயிலாயமடைவாய்கருதித்தினம்பரவே. (௬௯)

பரமாசுகந்தமலர்க்கொன்றையாயன்பர்பற்றுசிதம்
பரமாசுகந்தமதிச்சடையாய்ப்பாய்புலியதளம்
பரமாசுகந்தருதேவெநெடுஞ்சிலைபம்பொனின்று
பரமாசுகந்தகுமாலாய்க்கொள்கூடலிற்பஞ்சவனே. (எ௦)

பஞ்சானனன்றவத்தோரோவுமானைப்பயந்துதுஞ்சப்
பஞ்சானனம்போலடர்ந்துரித்தோன்பதபங்கயஞ்செம்
பஞ்சானனங்கைபங்கன்னெஞ்சமேவின்பரவியநீ
பஞ்சானனந்தனக்கூடன்றுழுவாய்பதம்வருமே. (எக)

வருந்ததிகானிலவாழ்க்கைபொய்மெய்யாம்வரனருளே
வருந்ததிநாலுன்பவமறுமாயர்மனைதொறுங்க
வருந்ததிநாறுமணிவாயன்போற்றும்வரதனன்பர்
வருந்ததிநாடிப்பணிமனமேகூடல்வாசஞ்செய்தே. (எஉ)

தேவேந்திரன்பணிந்தேற்றும்விமானத்தினுட்டிகழுந்
தேவேந்திரவிமதியழற்கட்பரன்சேர்ந்துகறுத்
தேவேந்திரண்டுவிழியார்மயலினிற்சிக்கியலேந்
தேவேந்திரமொழிகூட்டலில்வாழ்ந்தென்றுஞ்சேவிக்கவே. ()

வேதந்தவாதிமறைப்பொருளேகூடன்மேவுகத்தா
வேதந்தவாரணத்தோற்போர்வையாய்விமலாபரமா
வேதந்தவாதுதித்தேற்றவேயொளிர்மெய்யவறி
வேதந்தவாவொழித்தென்மீதில்வைப்பைநின்மெய்ப்பரிவே

பரிபவனேருமடியார்க்குறுதுகண்பார்த்தருளிப்
பரிபவனேவிடைவாகனத்தாயம்பசுங்கிளிவாம்
பரிபவனேருமுரசானைநீற்றம்பகபகரும்
பரிபவனேர்முலைமாதங்கூடற்பதியரனே. (எ௫)

அரவமதிக்முறுபாற்கடலினனந்தனெனும்
அரவமதிற்றுயில்வோன்புகழ்தேவவசலமருள்
அரவமதிகண்முகமாறுபங்கவமலசெல்வ
அரவமதிபதென்கூடலின்மேவுமம்மாகத்தனே. (எசு)

மாகந்தரகிறச்சூரையொழித்துமுன்வானவர்க்கு
மாகந்தரவந்தசேய்தேவகுஞ்சரிவல்லிக்கன்பாம்
மாகந்தரந்தந்தையேகூடலிலென்றும்வாழும்பர
மாகந்தரகிறையாலவன்பர்க்குறவாமனனே. (எஎ)

வாமனனேகண்மலராலர்ச்சித்துவணங்குமிறை
வாமனனேகவுயிர்க்குயிரானவமாதவர
வாமனனேகதிதந்தெனையாட்கொண்டுவாஞ்சையிற்கா
வாமனனேகமழ்சோலைத்தென்கூடற்சிவாகனனே. (எஅ)

வாகனனேர்நடையாள்பங்கவிண்டொழும்வானவிடை
வாகனனேயன்பர்நெஞ்சகலாதுவளருமுதல்
வாகனனேநுதற்கண்ணுயுயிர்விடுவைகலென்முன்
வாகனனேர்கதியேயருள்கூடலார்வாமரனே. (எகூ)

ஆரமளிக்குவிக்குங்கடற்பாரினிலாளுவது
ஆரமளிக்குளணங்கார்மயலிலழுந்தும்நெஞ்சே
ஆரமளிக்கும்புயற்றண்டலைக்கூடலில்லமர்ந்தே
ஆரமளிக்குலஞ்சூழ்கொன்றைவேணியனைப்பணியே. (அ0)

பணியப்பணியப்பதமுயர்த்தும்மரன்பத்தர்க்குச்செய்
பணியப்பணியன்மொழிபாகர்பொன்வரைபாரவின்னாண்
பணியப்பணியரியாக்கொண்டதேமெய்ப்பரனைத்துதி
பணியப்பணியமர்கோடிர்ன்கூடலைப்பாடுநெஞ்சே. (அக)

பாராவாரம்புரைகண்ணுமைபாகபரமநின்கண்
பாராவாரம்புவிமீதாருனையன்றிப்பார்ப்பரும
பாராவாரம்புணரன்பருக்காம்வளைபன்மணியா
பாராவாரம்புனைகூடலின்மேவும்பராபரனே. (அஉ)

பரமனையெண்ணுநெஞ்சேயென்றுதானிப்பவமறுமம்
பரமனையெற்றுபழிதொலைத்தாண்டுபணிபெறுமெய்
பரமனையெங்கும்நிறைந்தேபரிந்தன்பருக்கிம்பரும்
பரமனையென்னவருள்கூடலத்தனையேபரவே. (அஙு)

பரவாயமலனைப்பாவிநெஞ்சேமதிபார்புகழும்
பரவாயமலர்க்கடுக்கையணியபடைகணயம்
பரவாயமலத்தியானையெரித்தவபற்றதளம்
பரவாயமலற்றிருக்கூடலாயருள்பாவொன்றுமே. (அச)

என்றுமதியாயிருப்பவனான்மறையேற்றுமழல்
என்றுமதியூயிலங்குகண்ணுயபவமேயொழிய
என்றுமதியாழ்மொழியோடியான்கண்டிறைஞ்சுவதாள்
என்றுமதியாய்துதியாய்தென்கூடலிறையையென்றே.

சேவேறிகழ்விற்சிலையாய்மழுவணிதேவரர
சேவேறிகழ்விழிபங்கவென்றேற்றுசெழிவுறுநெஞ்
சேவேறிகபரந்தந்தாளுவதெவர்தீங்கரப்பே
சேவேறிகற்பவத்தைச்சிதைகூடலிற்சேவித்தினறே. (அசு)

இன்றேவனையகண்ணார்பாற்பற்காட்டியினியதுப
யின்றேவனையவேண்டாமனமேயறத்தேற்றுமறை
யின்றேவனையழலாடியையாழியெரிவிடம
யின்றேவனையரனைக்கூடலிற்பணிந்தேத்துவையே. (அஎ)

வையகத்தாரைநம்பாதெநெஞ்சேயுயர்மாமலைப்பா
வையகத்தார்வமொடுசேர்கருணைவரனைநம்பு
வையகத்தாவானதெய்வங்களைத்தொழாவராக்கியம்
வையகத்தாழ்வற்றிருகூடலிலேவதிந்துவந்தே. (அஅ)

வந்தேவலினிடைகட்குழற்சொல்லிவசந்தன்கண்சி
வந்தேவலியிற்றளரச்செய்தானொந்துமாதுவின்பால்
வந்தேவலியவடைந்தாளனையின்மருவுனெஞ்சு
வந்தேவலியுமைபாகதென்கூடல்வளர்வரனே. (அகூ)

வரனேசரணம்புகுந்தன்பதமறவாதநம்பி
வரனேசரன்புருவாய்க்கூடலில்வளர்வாயெளிய
வரனேசரமசரங்களிலுற்றுயர்வாழ்வருடா
வரனேசரமலரானையுங்கூற்றையுமாய்த்தவனே. (௯௦)

கூடலைக்கொடுபூசித்துநேசிகுறமுயலின்
கூடலைப்புனைகோவைப்பகைத்தகொடியபுரக்
கூடலையெரித்தோனைநெஞ்சேபணிகூறமுயர்
கூடலைமின்னுடலானைப்போற்றிக்கொளற்றிருவே. (௯௧)

திருக்கூடலாலகன்றுணினைநீங்காடினந்தனது
திருக்கூடலாலயர்ந்தானென்னைநின்னையேசெப்பரிய
திருக்கூடலாலணியாளுயிர்தேவர்கடேவவுயர்
திருக்கூடலாலவாயானமதுரையிற்சேர்த்துவையே. (௯௨)

வையம்பலவயந்தன்பெண்படைகிளிமாவைமலர்
வையம்பலவன்குடைமதனல்வெம்பிவாடியிவள்
வையம்பலவறையச்சோர்வள்வஞ்சிநீவாசந்துசெல்
வையம்பலவரிடங்கூடலில்வாழ்வதுதவமே. (௯௩)

தவமுறவஞ்செவியானைமுகனைத்தருமவன்சீ
தவமுறக்கோடிரன்கூடலைச்சேராததற்பரன்பா
தவமுறவாக்குநெஞ்சேகொடுவேனிறனிற்சுடுமா
தவமுறழ்வார்கற்பகநீழலுற்றதாந்தாரணிக்கே. (கச)

தாராதாரக்குழலார்கள்விருப்பந்தணிக்குமுத்தி
தாராதாரஃதைத்தவிர்கூடன்மேவெத்தரணிக்குமா
தாராதாரந்தனக்கோர்பாதிமேனிதருமுயரு
தாராதாரந்தளிர்கூவிளவென்றுச்சரிமனமே. (கரு)

சரிக்கையிஞருறவெண்ணுதுகூடறனிலுயர்வா
சரிக்கையினர்மொழிபாகரதுதாளிணையினையா
சரிக்கையினுழ்நெஞ்சமேயரனல்லாற்றரணியிற்சஞ்
சரிக்கையினுதணுவுக்குமசைவதுதானில்லையே. (கசு)

தாரிணையாதுவராநல்விணையரன்றன்றுதியிஃ
தாரிணையானுதினந்தினங்கூடலன்ருட்கன்பன
தாரிணையாதுவருத்துநெஞ்சேயெமன்றன்னையுதைத்
தாரிணையாதுவர்வாயுமைநேயனுதாரத்தனே. (கஎ)

தாரணியார்தொழக்காப்பவராங்கூடலிற்றண்மணத்
தாரணியார்குழற்பாகர்நிருதத்தறுகட்பொரு
தாரணியாம்பனிக்காதவனுமரிக்காழியைத்தந்
தாரணியார்வேணியார்துதியென்றுந்தவாநெஞ்சமே. (கஅ)

வானந்தவனந்தடஞ்சூழுங்கூடன்மருவன்புசெய்
வானந்தவனந்தரிக்குமரிவிண்வளருமக
வானந்தவனந்தனிலூர்பவனும்வழுத்துபக
வானந்தவனந்தமிலரனுருவன்வாழ்மனதே. (கக)

தேனூறந்தா தியருளினனெஞ்சேதமிழ்ச்செய்யுளிஃ
தேனூறந்தா தித்திருவிளையாடலைச்செப்பித்துதித்
தேனூறந்தா திரணெல்லாம்பவத்திற்குத்தீதகலத்
தேனூறந்தா தினிளங்கொன்றையார்கூடற்சேர்ந்திருந்தே.()

கூடற்றிருவிளையாடல்யமுகவந்தாதி




மீனாக்ஷி சுந்தரேசுரர் திருவடிவாழ்க.

—:0:—

## பரிசோதனபத்திரம்.

| பக்கம். | பாடல். | வரி. | பிழை. | திரு[illegible]தம். |
|---|---|---|---|---|
| ௧ | | ௮ | யமுக | யமக |
| ௭ | ௨ | ௫ | திண்முடி | திண்[illegible] |
| ,, | ௫ | ௨ | மருவும்பி | மருவ[illegible]பி |
| ௧௫ | ௫௭ | ௨ | வந்து | வந்த |
| ,, | ,, | ௫ | யோர்மதி | யேர்[illegible] |
| ௧௬ | ௫௫ | ௫ | கிரணையத்து | கிரணை[illegible]று |
| ௧௯ | ௭௧ | ௧ | மாணைப்பய | மாணை[illegible] |
| ௨௨ | ௯௨ | ௨ | ணென்னை | ணெ[illegible]ல் |

காரைக்குடியிலிருக்கும் மழவை-சதாவதானம்

## வாலசுப்பிரமண்ய அய்யரியற்றிது.

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

திருமாலுமெம்மாலும் பெருமாலுங்கொண்டதனாற்
றேடிப்பார்த்து
மிருமாலுமடிமுடியுங் காணவொண்ணாப்பேரொளியை
யென்னாலீன்ற
வொருமானாலந்தாதியறிந்துயர்வே னெனப்பிரம
னோதத்தேவ
குருமானுஞ்சுப்பையமான்கூடலந்தாதியையெளிதாய்க்
கூறினானே.

